# கதிர்காம



# புராணம்.

மீனும்பாள் அச்சியந்திரசாலை, கொழும்பு.

*With the compliments of*

THE CEYLON SAIVA PARIPALANA SABHA.

# கதிர்காம புராணம்.

சமாதானநீதிபதி
ஸ்ரீமாந்

க. நமசிவாயம் அவர்கள்

விருப்பத்தின்படி

வித்துவான்

ஸ்ரீமத்

சி. தாமோதரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

சங்கானை
சச்சிதானந்த அச்சியந்திரசாலை
யாழ்ப்பாணம்.

பிரமாதீச ஹு கார்த்திகைமீ

*A K [signature]*

உ

சிவமயம்.

# கதிர்காம புராணம்.

சமாதானநீதிபதி

ஸ்ரீமாந்

க. நமசிவாயம் அவர்கள்

விருப்பத்தின்படி

வித்துவான்

ஸ்ரீமத்

சி. தாமோதரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

சுங்காணை
சச்சிதானந்த அச்சியந்திரசாலை
யாழ்ப்பாணம்.

பிரமாதீச ஹு கார்த்திகைமீ

சிவமயம்.



அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

## க திர் கா ம ம்.



௧ தன தனன தான தன தனன தான
தன தனன தான — தனதான.

திருமக ளுலாவு மிருபுய முராரி
திருமருக நாமப் பெருமாள்காண்
செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்
தெரிதருகு மாரப் பெருமாள்காண்
மருவுமடி யார்கள் மனதில் விளையாடு
மரகதம யூரப் பெருமாள்காண்

மணிதரளம் வீசி யணியருவி சூழ
மருவு கதிர்காமப் பெருமாள்காண்
அருவரை கணீறு படவசுரர் மாள
வமர்பொருத வீரப் பெருமாள்காண்
அரவு பிறைவாரி இதழியணி வேணி
யமலர் குருநாதப் பெருமாள்காண்
இருவினை யிலாத திருவினை விடாத
விமையவர் குலேசப் பெருமாள்காண்
இலகுசிலை வேடர் கொடியினதி பார
விருதனவி னோதப் பெருமாளே.

---

உ தனத்தா தனத்தா தனத்தா தனத்தா
தனத்தா தனத்தா—தனதான.

சரத்தே யுதித்தா யுரத்தே குதித்தே
சமர்த்தா யெதிர்த்தே வருசூரைச்
சரிப்போன பட்டே விடுத்தா யடுத்தாய்
தகர்த்தா யுடற்று னிருகூறாய்ச்
சிரத்தோ டுரத்தோ டறுத்தே குவித்தாய்
செகுத்தாய் பலத்தார் விருதாகச்
சிறைச்சேவல் பெற்றாய் வலக்கா ரமுற்றாய்
திருத்தா மரைத்தா ளருள்வாயே
புரத்தார் வரத்தார் சரச்சே கரத்தர்
பொரத்தா னெதிர்த்தே வருபோது
பொறுத்தார் பரித்தார் சிரித்தா ரெரித்தார்
பொரித்தார் நுதற்பார் வையிலேயின்
சரித்தோ லுரித்தார் விரித்தார் தரித்தார்
கருத்தார் மருத்தூர் மதனுரைக்
கரிக்கோ லமிட்டார் கணுக்கா னழுத்தே
கதிர்க்கா மமுற்றூர் முருகோனே.

---

௩ தனதன தத்த தனதன தத்த
தனதன தத்த—தனதான.

மருவரு வெற்றி மலர்தொடா விற்கை
வலிசெயா நிற்கு மதனுலும்

மதில்கடா வுற்ற கலையடா வட்ட
மதிசுடா நிற்கு மதனாலும்
இருகணான்முத்த முதிரயா மத்தி
னிரவினா னித்த மெலியாதே
யிடருருமெத்த மயல் கொளா நிற்கு
மிவளைவாழ் விக்க வரவேணும்
கரிகள்சேர் வெற்பி லரியவே டிச்சி
கலவிகூர் சித்ர மணிமார்பா
சனகமா ணிக்க வடிவனே மிக்க
கதிருகா மத்தி லுறைவோனே
முருகனே பத்த ரருகனே முத்தி
முதல்வனே பச்சை மயில்வீரா
முடிகிமே விட்ட கொடியசூர் கெட்டு
முடியவே றொட்ட பெருமானே.

---

௨ தனனதா தத்த தனனதா தத்த
தனனதா தத்த—தனதான

கலையிலே மைக்கண் விழியிலே பெற்ற
குருதி நேரிட்ட விதழ்மானார்
குழையிலே தெற்று நடையிலே நெய்க்கொள்
குழலிலே பற்க டனிலேமா
முலையிலே யற்ப விடையிலே பத்ம
முழுநிலா வட்ட முகமீதே
முதுகிலே சுட்டி நுதலிலே யிக்கு
மொழியிலே சிக்கி விடலாமோ
தலைவனே முத்தி முதல்வனே துட்ட
ரிகலனே நித்த மிளையோனே
சதுரனே பித்தர் புதல்வனே மெச்சு
சரவணா செச்சை முருகோனே
உலகனே மிக்க கதிர காமத்தி

லொருவனே விட்ணு மருகோனே
யொயிலனே பச்சை மயிலனே சித்ர
வுருவனே பத்தர் பெருமாளே.

---

௫ தனதானத் தனதான

இறவாமற் பிறவாம லெனையாள்சற் குருவாகிப்
பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாயே
குறமாதைப் புணர்வோனே குகனேசொற் குமரேசா
கறையானைக் கிளையோனே கதிர்காமப் பெருமாளே.

---

௬ தனதனா தத்தனத் தனதனா தத்தனத்
தனதனா தத்தனத்—தனதான.

சரியையா ளர்க்குமக் கிரியையா ளர்க்குநற்
சகலயோ கர்க்குமெட் டரிதாய
சமயபே தத்தவர்க் கணுகொணா மெய்ப்பொருட்
டருபரா சத்தியிற் பரமான
துரியமே லற்புதப் பரமஞா னத்தனிச்
சுடர்வியா பித்தநற் பதிநீடு
துகளில்சா யுச்சியக் கதியையீ றற்றசொற்
சுகசொரூ பத்தையுற் றடைவேனோ
புரிசைசூழ் செய்ப்பதிக் குரிய சாமர்த்தியப்
புருட வீரத்துவிக் ரமசூரன்
புரளவே றெட்டகைக் குமரமேன் மைத்திருப்
புகழையோ தற்கெனக் கருள்வோனே
கரியயூ கத்திரட் பலவின்மீ திற்சுளைக்
கனிகள்பீ றிப்புசித் தமராடிக்
கதலிசூ தத்தினிற் பயிலுமீ ழத்தினிற்
கதிரகாமக் கிரிப் பெருமாளே.

---

௭ தனனதான தானான தனனதான தானான
தனனதான தானான—தனதான

அடைபடாது நாடோறு மிடைவிடாது போம்வாயு
உடையமேனு வீடாகு மெனநாடி

மருள்பெறு வநாசார கருமயோ கியாய்நாளு
    மவனிமீ திலோயாது தமோறி
உடலம்வே றியான்வேறு கரணம்வேறு வேறாக
    வுதறிமாசு காதீத வடிவூடே
யுருகியாறி யாசார பரமயோகி யாமாறு
    னுபயபாத வாரீச மருள்வாயே
வடபராரை மாமேரு கிரிபெடாந டாமோது
    மகரசீத பாலாழி யமுதாக
மருடவாள ராசோவ மதியநோவ வாரீச
    வனிதைமேவு தோளோனு முடனேவக்
கடையுமாதி கோபாலன் மருகதீர வேல்வீர
    கதிரகாம மீதூரி லுறைவோனே
கனகலோக பூபால சகலலோக வாதார
    கருணைமேரு வேதேவர் பெருமானே.

---

அ  தனனதான தானதத்த
    தனனதான தானதத்த
        தனனதான தானதத்த—தனதான.

முதிருமார வாரநட்பொ
    டிலகுமார வாரமெற்றி
        முனியுமார வாரமுற்ற டலாவே
மூடவிலாது நேர்வடக்கி
    லெரியுமால கால்விடத்தின்
        முழுகியேறி மேலெறிக்கு லவாவே
வெதிரையாயர் வாயில்வைத்து
    மதுரராக நீடிசைக்கும்
        வினைவிடாத தாயருக்கு மளியாதே
விளையுமோக போகமுற்றி
    யளவிலாத காதல்பெற்ற
        விகடமாதை நீயணைக்க வரவேணும்
கதிரகாம மாநகர்க்கு
    ளெதிரிலாத வேல்தரித்த
        கடவுளே கலாபசித்திர மயில்வீரா

கயலுலாம்வி லோசனத்தி
    களபமார்ப யோதரத்தி
        ககனமேவு வாளொருத்தி மணவாளா
அதிரவீசி யாடும்வெற்றி
    விடையிலேறு மீசர்கற்க
        வரியஞான வாசகத்தை யருள்வோனே
யகிலலோக மீதுசுற்றி
    யசுரர்லோக நீறெழுப்பி
        யமரலோகம் வாழவைத்த பெருமாளே.



உ

# விஞ்ஞாபனம்.



உலகத்திலிருக்குந் தலங்களுள்ளே கதிர்காமதலம் மகாமகிமையபொருந்தியதென்பது யாவருக்குந் தெரிந்ததொன்றும். இக்கலிகாலத்தில் எவரும் அதிசயிக்கும்படி பல அற்புதச் செயல்கள் அங்கு நடந்து வருதலையும் யாவருமறிவர். உலகத்தார் கதிர்காமதலத்தை யடைந்து வணங்கியும், பல பிரார்த்தனைகள் செய்தும், விரும்பிய விரும்பிய பேறுகளைக் குறைவறப் பெற்று வருதலும் உலகப்பிரசித்தமாம். கதிர்காமதலத்தின் பெயரைக் கேட்டமாத்திரத்தில் எவர்க்கும் உள்ளத்தில் ஓர் அச்சமும் கசிந்தொழுகும் பேரன்பும் உண்டாதலும் அநுபவமாம்.

அம்மகா தலத்திலுள்ள ஆலயத்திருப்பணி நடந்தது இன்னகாலமென்றுணர முடியாமல் நெடுங்காலம் போய்விட்டபடியால், அங்குள்ள மண்டபங்கள், தூண்கள், மதில்கள் முதலிய யாவும் பழுதடைந்து இன்னுஞ் சிலகாலத்துள் விழுந்துவிடத்தக்க நிலைமையிலிருப்பதால், அவற்றைப் பழுதடையாவண்ணம் மறுபடியும் புதுக்குவித்துத் திருப்பணிசெய்விக்க வேண்டியது ஆவசியகத்தினும் ஆவசியகமாயிருக்கின்றது.

அங்கே செய்விக்கவேண்டிய பணிகளாவன.—

1. திஸமாருமவிலிருந்து கதிர்காமத்துக்குப் போகும் வழியாகிய 10 மைல்தூரம் போக்குவரவுக்கு வசதியின்றிப் பெருஞ் சங்கடமாய் எவர்க்கும் பெருங் கஷ்டத்தை விளைவிப்பதால், அக்கஷ்டம் நீங்கி எவரும் சுகமாய்ப் போக்கு வரவு செய்யும்படி மண்தெருப் போடுதல். அத்தெருவிலே சிறிய மதகுகள் 60 வரை கட்டுதல். திஸமாருவுக்குச் சமீபமான இடத்தில் கற்பாவிய நீர்ப்பாய்ச்சல் வழி 10 அடி அகலத்தில் 150 அடி நீட்டுள்ளதாய் உண்டாக்கல். இரண்டருகிலுங் கான்வெட்டுதல். தெரு 10 அடி அகலம் இப்பொழுதிருப்பது போதாமையால் 20

அடி அகலத்திற் பெரிதாக்குதல். மரங்களைத் தறித்து வேர்களைப் பிடுங்குதல். மூன்றுமைல் தூரம் மண் கரைந்து சேறுள்ள கற்கள் கிளம்பிப் போக்குவரவு செய்ய வசதிக்குறைவாயிருப்பதால், வெடிவைத்துடைத்துச் சமன்செய்தல். 2 மைல்தூரம் மழைவெள்ளத்தினாலே தெருக்கரையாதபடி தெருவை அகலப்படுத்தி இரண்டுபக்கங்களிலும் பெரிய சான்கட்டி வெள்ளத்தைப் போகவிடுதல். தெருவில் மூன்று இடத்தில் வண்டிகள் போகக்கூடாதபடி பெரிய ஏற்றம் இறக்கம் இருப்பதால் அவற்றைவெட்டி இயன்றளவு சமன்செய்தல். கான்வெட்டும் மண்ணைத் தெருவிற்போட்டு 10 மைலும்மண்தெருவாக்கல். மாணிக்க கங்கைக்குச் சமீபத்தில் வண்டிகள்போய் நிற்பதற்கு ஓர் இடம் அமைத்தல். இவைகளுக்குரிய செலவு மதிப்பு ரூபா 10000.

2. திஸமாருமவில் இப்பொழுது 5 ஏச்சர் நிலம் வாங்கிவிட்டிருக்கிறது. அதில் திருப்பணிச்சாமான்களை வாங்கிவைத்தனுப்பவும், தெருவேலைசெய்வோர் செய்விப்போர் தங்கவும் ஓர் இடங்கட்டுதல். கிணறு ஒன்று அங்கு உண்டாக்கல். கட்டிடத்தைப் பின்பு யாத்திரைக்காரர் தங்கும் மடமாக ஆக்கக்கூடும். இதன்மதிப்பு ரூபா 3000.



# கோவில்.



I. முத்திலிங்கசுவாமி கோவில்—இக்கோவில் மண்சுவரும் காட்டுத்தடித்தூண்களும் பரச்சலாகைகளும் மண் ஓடுங்கொண்டு வேலைசெய்து மூடப்பட்டு அழியுநிலையிலிருந்து இப்பொழுது புதிதாகத் திருப்பணி வேலையுந் தொடங்கிச் சிறிதாக ஒருகோவில் கட்டிவேலை நடந்துவருகிறது.

2. வள்ளியம்மை ஆலயம்.-இதன் சுவர்களும் தூண்களும்வீழுந்து, காட்டுத்தடிகளால் தூண் நிறுத்தி அந்த ஆதரவில் தங்கிநிற்கின்றது. பரவுத்திரங்கள் கைமரங்கள் சலாகைகள் போட்டு மண் ஓடும் போடப்பட்டிருக்கிறது. அவைமூ

துபட்டு மழைக்கு ஒழுகி வெள்ளம் நிற்பதோடு இன்னுஞ்சிலகாலத்துள் முழுவதும் விழுந்துவிடத்தக்கதாகவும் இருக்கிறது. இதைப்புதிதாகக்கட்டுவதற்கு மதிப்பு ரூபா 10000.

3. மாணிக்கப்பிள்ளையார்கோவில்—பழையகோவிலை பால்குடிபாவா இடித்துத் திருப்பணிசெய்யத்தொடங்கி, மண்சுவருள்ள ஒரு சிறுஓட்டுக்கொட்டகையில் சுவாமியை வைத்திருக்கிறார் அதுவும் பழுதாய் விழத்தக்க நிலைமையிலிருக்கிறது இதைப் புதிதாய்க்கட்டுவதற்கு மதிப்புரூபா 5000.

4. தெய்வயானையம்மைகோவில்—இக்கோவிலை பால்குடிபாவா செங்கற்பணியாகச் செய்து குறைவேலையில் விட்டிருக்கிறார். அதில் அரசுமுதலிய செடிகள் முளைத்திருப்பதைச் சோதித்துத் திருத்தி, அதிலிருந்தே கட்டுவது நோக்கம். அதன் செலவு மதிப்பு ரூபா 4000.

5. சுவாமிகோவில்—மூலஸ்தானமாகிய இரகசியம் சுற்றிச்செங்கற்சுவரும் மேலே மர உத்திரம் கைமரம் சலாகைகளும் மண் ஓடும் உள்ளதாயிருக்கிறது. அதிற் பலபழுதுகளை உண்டாகிச் சிலகாலத்துள் முழுவதும் பழுதுபடத்தக்க நிலைமையில் இருக்கிறது. ஆதலால், முன்னுள்ள கட்டிடத்திற் கைவைக்காமல் சுற்றிச் சுவர் எழுப்பி அதன்மேல் இரும்பினால் உத்திரக்கம்பிகள் போட்டு வேலை செய்து, செப்போடு வேய்ந்து, பழையசபையின்மேலே மூடிக்கட்டிமுடிப்பது நோக்கம். பக்கமண்டபங்களைக் கருங்கற்றூண் நிறுத்திமேலே கருங்கல்லாற் பாவுகல்போட்டு முடிக்கவும், முன்மண்டபம் முழுவதும் கருங்கற்பணியாய் வேறுவேலை செய்யவும் மேலே ஓடு போட்டு முடிக்கவும் நோக்கம். அதன்மதிப்புரூபா 40000.

6. விடுதிமண்டபங்களும், கடைகளும்— திருப்பணிசெய்யுங்காலத்திலே வேலைசெய்பவர்களும் செய்விப்பவர்களும் தங்

குதற்கேற்ற விடுதிச்சாலைகள் அமைந்த சில கட்டிடங்கள் கட்டவேண்டியிருக்கின்றது. பின்பு அவற்றைக் கடைகளுக்கும் யாத்திரைவாசிகள் தங்குதற்கும் உபயோகமாக்கலாம். இதற்குமதிப்புரூபா 10000.

7. கோவிலையும் வீதிகளையும் சுற்றியுள்ள இடங்கள் காடாயிருப்பதால் அந்த இடங்களைத் திருத்தித் துப்புரவாக்கி நல்ல வசதிப்படுத்தவேண்டும். இதன்மதிப்பு ரூபா 2000.

இத்திருப்பணிகள் ஆவசியகம் நடக்கவேண்டியவையாயிருக்கின்றன. அச்செலவில் நானும் ஒரு பாகம் ஏற்பதாய்ச் சங்கற்பித்திருக்கிறேன். கதிர்காமதலத்திற் பத்தியுள்ள மற்றைத்தருமசீலர்களும் இத்திருப்பணி நிறைவேறும்படி இவற்றுள் ஒருபகுதியை ஏற்று நடத்துமாறு கேட்கிறேன்.

அத்தலத்தில் அன்புவளர்ந்து திருப்பணிவேலைகளை நடத்துவிப்பதில் யாவர்க்கும் மனக்கிளர்ச்சி யுண்டாகவேண்டியே இக்கதிர்காமபுராணத்தை அச்சிற்பதிப்பித்து வெளிப்படுத்தினேன்.

அன்பர்கள் இப்புராணத்தை யோதிக் கதிர்காமமகிமையையுணர்ந்து அங்கு ஆகவேண்டிய திருப்பணிவேலைகளை நடத்துவித்துக் கதிர்காமநாதருடைய திருவருளைப் பெற்று உய்வார்களாக.

அயோத்தியா.
கொழும்பு

க. நமசிவாயம்.

உ

# முகவுரை.



கதிர்காமம் என்னுந்தலம் இலங்கையின்தென்பாகத்திலுள்ளது. இலங்கை பரதகண்டமாகிய புண்ணிய பூமியின் ஒரு பகுதியாயும், "சிவபூமி"யாயும், விராட்புருடனுக்கு இடைநாடியாயும் விளங்கும். இலங்கையின்பெருமை வேதாகமபுராணேதிகாசங்களிலே மிகவெடுத்துச் சொல்லப்படுகின்றது. இலங்கையென்னுஞ்சொல்லுக்குச் சமுத்திரநடுவிலிருப்பது என்பதுபொருளாம். இத்தேசம் சமுத்திர மத்தியிலிருத்தலால் இதற்கு இலங்கையென்று பெயராயிற்று. இலங்கையின் பல பாகங்கள் கடலுள் அமிழ்ந்தி அழிந்துபோயின. இப்பொழுதுள்ள இலங்கை இலங்கையின் ஒருபகுதியாகும்.

இலங்கை முன்னே குபேரனுக்குஉரியதாய்ப் பலவளங்களும் பெற்றிருந்தது. பின்பு இராவணனாலே கைப்பற்றப்பட்டு அவனுக்கு உரியதாயிருந்தது.

இலங்கையிலே ஆயிரத்தெட்டுச் சிவஸ்தலங்களும், சில சுப்பிரமணியதலங்களும், விஷ்ணுஸ்தலங்களும் இருந்தனவென்று புராணத்தால் வெளியாகின்றது.

திருக்கோணமலை, திருக்கேதீச்சரம், கீரிமலை, சம்பேசுரம், வாரிவனம், முனீச்சரம் முதலியன சிவஸ்தலங்கள். கதிர்காமம், காங்கேசன்றுறை, கந்தவனம், கந்தசாமிமலை, கண்டகிவடகாந்தாரம், உவந்தமலை முதலியன சுப்பிரமணியஸ்தலங்கள். வல்லிபுரம், பொன்னாலயம் முதலியன விஷ்ணுஸ்தலங்கள்.

திருக்கோணமலை, திருக்கேதீச்சரம் என்னும் இரண்டு தலங்களும் தமிழ்வேதமாகிய தேவாரப்பதிகம் பாடப்பெற்ற தலங்கள். கதிர்காமம் திருப்புகழ் பாடப்பெற்றதலம். திருப்புகழாவது சுப்பிரமணியசுவாமி வரப்பிரசாதியாயிருந்த அருணகிரிநாதராலே பாடப்பெற்ற தோத்திரம். இது அருள்வாக்காகும்.

கதிர் காமம், ஜோதிஷ்காமம் அம்சுகாமம் என்பன அத்தலத்தின் திருநாமங்களாம். கதிர்காமம் என்பது தமிழ்மொழி. ஜோதிஷ்காமம், அம்சுகாமம் என்பன சம்ஸ்கிருதமொழிகள். கதிர், ஜோதி, அம்சு என்னுஞ்சொற்களுக்கு "ஒளி" என்பது பொருளாம். காமம்-கிராமம். கதிரகாமதலத்தில் உள்ளமலை சோதிவடிவாயிருத்தலால், அம்மலைக்குக் கதிர்காமமலை ஜோதிஷ்காமகிரி அம்சுகாமாத்திரி என்னும் பெயர்களும், அச்சோதிமலை விளங்குந்தலத்துக்குக் கதிர்காமம், ஜோதிஷ்காமம் அம்சுகாமம் என்னும் பெயர்களும் உள்ளனவாயின. அருணாசலம்போலக் கதிர்காமமலையும் சோதிவடிவினதாகும். அம்மலை சோமசூரியாக்கினிகளென்னும் முச்சுடர்களின சோதிபெற்று அவற்றின் வடிவினதாய் விளங்குமென்று இப்புராணத்தின் கதிர்காம சயிலமான்மியப் படலத்திலே விளங்குகின்றது.

கதிர்காமமலையின்மேலே சிறந்த சிந்தாமணி யென்னும் ஆலயம் ஒன்றிருப்பதாய்க் கதிர்காமகிரிப்படலத்திலே விளங்குகின்றது. அவ்வாலயம் இக்காலத்துச் சென்று தரிசிக்க

இயலுவதில்லை. ஆயினும் அம்மலைமேல் ஓர் ஆலயம் உண்டென்பதை விசுவசித்துச் சனங்கள் அங்கேறிப்போய் ஒருவகையாக வணங்கிவருகின்றனர். கதிர்காமதலத்தில் இப்பொழுது யாவராலுங் கண்டுவழிபடப்படும் ஆலயமே "ஏமகூடம்" எனப் புராணத்திற் சொல்லப்படும் பாசறையாம்.

கதிர்காமதலத்தின் மகிமை பதினெண் புராணங்களுள் ஒன்றாகிய காந்தமகாபுராணத்திலே தக்ஷிணகைலாசமான்மிய முரைக்குமிடத்திலே சொல்லப்பட்டது. தக்ஷிணகைலாசம் எனப்படுவது திருக்கோணமலை. திருக்கோணமலையை யுள்ளிட்டு இலங்கையிலேயுள்ள தலங்களின் மகிமைகளை யெடுத்துரைக்கும் புராணம் தக்ஷிணகைலாசமான்மியம் எனப்படும். அம்மான்மியம் இருபத்தேழு அத்தியாயங்களோடு கூடியது. அதில் ஒன்பது பத்து பதினொன்று ஆகிய மூன்று அத்தியாயங்களிலே கதிர்காமமகிமை சொல்லப்பட்டிருக்கிறது. அப்புராணம் வடமொழியிலுள்ளது. அதனால் வடமொழியுணர்ச்சியில்லாத தமிழ்மாந்தர் அப்புராணத்தையோதிக் கதிர்காமமகிமையை அறிந்து கொள்ள இயலாதாயிற்று. அநேகர்க்குக் கதிர்காமதலத்தின் முன்வரலாறுகளும் அவ்வரலாறுகள் அடங்கிய புராணமும் இன்னதென்பது தெரியமாட்டாது. பொதுவகையால் அத்தலம் மகாமகிமைபொருந்தியது என்பதும் பல அற்புதங்களோடுகூடியது என்பதும் எல்லார்க்குந்தெரியுமாயினும், அதன் முன்வரலாறுகள் தெரியவேண்டியதும் ஆவசியகமேயாம். அப்படித்தெரிவதனால் அத்தலத்தின்மேற் பத்திமிகவளரும்.

கதிர்காமபுராணத்தைத் தமிழ்மொழியில்மொழி பெயர்ப்பித்து எவரும் உணர்ந்துகொள்ளும்படி வசனரூபமாக இயற்றுவித்து அச்சிற்பதிப்பித்து வெளியிட்டவர்கள், கீரிமலை யென்னுந்தலம் இக்காலத்து மேலோங்க ஏதுவாயிருந்தவரும், கீரி

மலைச்சிவாலயத்திருப்பணிக்குப் பேருதவிபுரிந்தவரும், அங்கு சிறந்த மடாலயம் ஒன்று கட்டுவித்து எவர்க்கும் பேருபகாரமாய் நடத்துபவரும், இன்னும் பலதருமங்கள்புரிந்த பெரும் புண்ணியசீலருமான ஸ்ரீமத். கதிரைவேற்செட்டியார் அவர்களுடைய குமாரரும், சமாதான நீதிபதியும், அரசாட்சியாரின் துறைமுக அதிகாரசங்கத்து அங்கத்தவருள் ஒருவரும், கொங்கோங் ஷங்காய் வங்கியின் தலைமைச்செட்டியருமாகிய ஸ்ரீமாந் க. நமசிவாயம் அவர்கள்.

இப்புராணத்தை வடமொழியிலிருந்து தமிழ் மொழியில் மொழிபெயர்த்தற்கு உதவிபுரிந்தவர் பண்டிதசிகாமணியாகிய பிரம்மஸ்ரீ சர்வேசுவரசாஸ்திரிகள் அவர்கள்.

கதிர்காமதலத்தில் இப்புராணகாலத்துக்குப் பின்னே நடந்த முத்திலிங்கசுவாமிகள் சரித்திரம்போன்ற அற்புதசரித்திரங்கள் பலவுள்ளன. அவை யாவும் கன்னபரம்பரையாய் வழங்கிக்கொண்டிருக்கின்றன. புராணத்திற் சேர்ந்திராமையால் அக்கதைகள் இங்கே வந்தில.

கதிர்காமதலத்தில் இப்பொழுதும் பல அற்புதங்கள் அவ்வெப்பொழுது நடந்துவருகின்றன. அவற்றை அநேகர் அநுபவத்தில் அறிந்திருக்கிறார்கள். கதிர்காமம் என்னும்பெயர் கேட்டமாத்திரையே எவர்க்கும் அன்பும் அச்சமும் தோன்றும். கலிகாலத்தில் மகாஅற்புதமாய் விளங்குந் தலம் இதுவேயாம்.

வித்துவான்

சி. தாமோதரம்பிள்ளை.

யாழ்ப்பாணம்.

---

உ

சிவமயம்.

# கதிர்காம புராணம்.

## நைமிசப்படலம்.

புண்ணியபூமியாகிய இப்பரதகண்டத்திலே தவத்தினால் மிக்க முனிவர்களுக்கு உறைவிடமாய்ப் பலவகை வளங்களும் நிறைந்து விளங்கும் நைமிசவனத்திலே, சௌனகர் முதலிய முனிவர்கள் யாவரும் ஒருநாள் உதயகாலத்திலே ஸ்நானஞ் செய்து சந்தியாவந்தனம் சிவபூசை முதலிய நித்திய கருமங்களை முடித்துச் சித்தசுத்தியோடு வீற்றிருந்து, கதிர்காமதலத்தில் எழுந்தருளியிருக்கும் பெருங்கருணைப் பிழம்பாகிய சுப்பிரமணியக்கடவுளுடைய திருவடிகளை உள்ளத்தில் இருத்தி அனலிடைப்பட்ட மெழுகுபோல மனங்கரைந்துருக அன்பும் ஆனந்தமும் உடையவராய், இவ்வுலகத்தில் யாவராலுந் துதிக்கப்பட்டு இணையின்றி விளங்கும் மகிமைபொருந்திய கதிர்காமதலத்தின் அரிய புராணத்தினைக் காதினாற் கேட்டுப் புண்ணியம் பெறவேண்டுமென்னும் பேரவாக்கொண்டு, அதனை எடுத்துச்சொல்ல வல்ல மகாமுனிவராகிய சூதரை மனத்தில் நினைத்தார்கள்.

அப்பொழுது சூதமகாமுனிவர் நைமிசாரணிய முனிவர்களது உள்ளக்கருத்தை யுணர்ந்து மனமகிழ்ச்சியோடு எழுந்தருளி, விபூதியும் உருத்திராக்கமும் சடாமுடியும் உடையவராய்க் கையிலே தண்டு கமண்டலங்கள் விளங்க அந்த நைமிசவனத்தை யடைந்தார்.

குளிர்ந்த செந்தாமரைபோல மலர்ந்த முகத்தோடும் அங்கு எழுந்தருளி வந்த சூதமுனிவரை நைமிசாரணிய முனிவர்கள் கண்டு, இருக்கைவிட்டெழுந்து சிரசின்மேல் அஞ்சலியாகக் குவித்த கையராய் எதிர்சென்று வணங்கி அழைத்து வந்து ஆசனத்தில் இருத்தி, முனிவர்பெருமானே, தேவரீர் இன்று இங்கு எழுந்தருளுதற்கு முற்பிறவிகளிலே நாங்கள்செய்த பெருந்தவம் யாதோ! தேவரீர் எழுந்தருளப்பெற்றதனால் இத்தினம் எங்களுக்கு ஒரு புண்ணியதினமாயிற்று. இப்பிறவியை அடைந்ததனால் ஆகிய பயன் உலகத்திலுள்ள மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும் மூன்றன் மகிமைகளைக் கேட்டு அவைகளை வழிபட்டு உய்தலேயாம்.

தேவரீர் முன்பு பல தல மகிமைகளை எடுத்துச் சொல்லக்கேட்டுப் புண்ணியப்பேறடைந்திருக்கிறோம். இன்று சிவகுமாரராயும் தாரகன் சிங்கன் சூரபன்மன் முதலிய தானவர் யாவரையுஞ் சங்கரித்து இந்திரன் சயந்தன் முதலிய தேவரை வாழ்வித்து விண்ணகங் குடியேற்றியருளிய கருணாநிதியாயுமுள்ள சுப்பிரமணியக்கடவுளுக்கு உவந்த தலமாகிய கதிர்காமத்தின் மகிமையைக் கேட்டு ஆனந்தமடையும் பேரவாவுடையேம். சகல கலைகளையும் ஒருங்குணர்ந்த வேதவியாச முனிவரிடத்திலே பதினெண் புராணங்களையும் ஓதி அப்புராணங்களுக்கு ஓர்ஆகரமாய் விளங்கும் தேவரீர் அக்கதிர்காம புராணத்தை அடியேங்கள் உய்யுமாறு விரித்துச் சொல்லியருளல்வேண்டுமென்று இரந்தனர்.

சூதமுனிவர் அதுகேட்டு ஆனந்தபரவசராய் உரோமஞ்சிலிர்ப்ப இரண்டுகண்களினின்றும் நீர் தாரைதாரையாய் ஒழுக அஞ்சலிஹஸ்தராய் இருந்து கதிர்காமதலத்தை உள்ளத்திலே சிந்தித்து வணங்கி, அளவில்லாத தவத்தைச்செய்து திருவருள்வழி யொழுகும் முனிவேந்தர்காள், அடியேன்

முற்பிறப்பிற்செய்த தவமே பெருந்தவம். உலகத்திலுள்ள தலங்களெல்லாம் மிகச் சிறந்து மகாமகிமைபொருந்தி விளங்கும் அற்புததலமாகிய கதிர்காமத்தின் மகா புராணத்தை இன்று உங்களுக்கு எடுத்தோதும் பெரும்பாக்கியம்பெற்றேன். சொல்லுகின்ற யானும் கேட்கின்ற நீங்களும் மற்றுமுள்ள உலகத்தாரும் பெரும் புண்ணியத்தை யெய்துதற்குரிய மகிமை பொருந்திய தலமாகிய கதிர்காமத்தின் புராணத்தையே கேட்க விரும்பினீர்கள். ஆயிரமுகமும் இரண்டாயிர நாவுமுள்ள ஆதிசேடனாலும், நான்கு வேதங்களையும் பதினெண்புராணங்களையும் இதிகாசங்களையும் மநுமுதலிய தருமநூல்களையும் ஓதியுணர்ந்த நான்முகனாலும் இயம்புதற்கரியது அக்கதிர்காமதல மகிமை. அதனை ஆதியிலே கைலைமலையில் வீற்றிருக்கும் பரமசிவன் பார்வதிதேவியாருக்கு அருளிச்செய்தார். பின்பு விட்டுணுமூர்த்தி ஆதிசேடனுக்கும் கருடனுக்கும் உரைத்தார். இந்திரனுக்குப் பிரமதேவர் கூறினார். விநாயகர் தமது கணங்களுக்கு உரைத்தார். சுப்பிரமணியர் அகத்தியருக்கு உரைத்தார். பிருங்கிமுனிவர் நாரதமுனிவருக்கு ஓதினார். மகாகாளர் பிருகுவுக்கு உரைத்தார். கௌசிகருக்குக் காசிபர் உரைத்தார். ததீசி கண்ணுவருக்கும் புலகருக்கும் உரைத்தார். ஜைமினி குருக்ஷேத்திர வாசிகளுக்குக் கூறினார். மார்க்கண்டேயர் மற்றுமுள்ள முனிவர்களுக்கு உரைத்தார். பராசர் வேதவியாசருக்கு உரைத்தார். நந்திதேவர் சனகாதிகளுக்கு உரைத்தார். வேதவியாசர் சுகருக்கும் துர்வாசருக்கும் உரைத்தார். இவ்வாறு பரமசிவனாலும் தேவராலும் முனிவராலும் உரைக்கப்பட்டுப் பாரம்பரியத்தில வந்தது அக்கதிர்காம புராணம். அம்மகாபுராணத்தை உங்களுக்கு யான் சொல்லுகின்றேன். மெய்யன்போடு கேட்கக்கடவீர்கள் என்று சொல்லத்தொடங்கினார்.

நைமிசப்படலம் முற்றிற்று.



# திருவவதாரப் படலம்.



முன்னொரு காலத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் தக்கன் செய்த யாகத்துக்குப் போயிருந்து சிவநிந்தையைக் கேட்டனர். பின் அப்பாவவசத்தினூற் காசிபருக்கும் மாயைக்கும் பிறந்த புத்திரர்களாகிய சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் என்னும் அசுரர்களாலே துன்பஞ் செய்யப்பட்டு அரசிழந்தனர். இந்திரகுமாரனுகிய சயந்தனும் மற்றைத் தேவரும் சிறையிடைப்பட்டு வருந்தினூர்கள். அத்தேவர்கள் அசுரர் செய்தகொடுமைகளைச் சகிக்கலாற்றுதவராய் வேறுபுகலிடங் காணுமல் மயங்கி, முடிவில் எல்லாவுயிர்க்கும் உயிராய் நின்று படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களை இயற்றிஅவ்வுயிர்களது மலம் மாயை கன்மங்களைப் போக்கி ஆட்கொண்டருளும் பரமகருணுநிதியாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருக்கைலாயமலையை யடைந்து, திருநந்திதேவரை வழிபட்டு அவருடைய அநுமதிப்படி சிவ சந்நிதியிற்போய் வணங்கி, "எம்பெருமானே, அசுரர் செய்யுந் துன்பத்தைப் பொறுக்கமுடியாமல், இங்கு தேவரீருடைய திருவடிகளையே புகலிடமாகக் கருதி அடைக்கலம் புகுந்தேம். எங்கள்மேற் கருணைபூத்து அவ்வசுரரைச் சங்கரித்து எங்களைக் காத்தருளல் வேண்டும்"என்று பிரார்த்தித்தார்கள். விருப்புவெறுப்பின்றி அவரவர் கன்மங்களை நாடி அவ்வப்பொழுது அவரவர்க்கு ஊட்டியறுத்தருளும் பெருங்கருணைப்பிழம்பாகிய சிவபெருமான், அவர்மேல் அருள் சுரந்து ஆறு திருமுகங்கள் உள்ளவராய் வீற்றிருந்து, ஆறு திருமுகங்களினும் உள்ள நெற்றிக்கண்களிலிருந்து ஆறு திப்பொறிகளை யுய்த்து அவைகளைக் கங்கைநதியிலே கொண்டு போய்விடும்படி வாயுதேவனுக்கும் அக்கினிதேவனுக்குங்கட்டளையிட்டருளினூர். அவ்வாணையை மேற்கொண்டு அவ்விருவ

ரும் சிரசின்மேலே சுமந்து சென்று அத்திப்பொறிகளைக் கங்கையிலே விட்டனர். அக் கங்கைநதி அவைகளைச் சரவணப் பொய்கையிலே செலுத்த, அப்பொறிகளாறும் ஆறுகுழந்தைகளாய் வடிவங்கொண்டு அத்தடாகத்திலிருந்து கார்த்திகைமாதர் ஊட்டிய பாலுண்டு வளர்ந்து விளையாடிக்கொண்டிருந்தனர்.

பின்பு சிவபெருமான் உமாதேவியாரோடு அங்கு எழுந்தருளி உமாதேவியாருக்கு அவர்களைக் காட்டியருள, உமாதேவியார் மனக்களிப்போடு அவ்வறுவரையும் இருகைகளாலும் ஒருங்கே சேர்த்து வாரியெடுத்தனர். அவ்வாறுருவும் ஓருருவாய்ச்சேர்ந்து ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருவிழிகளும் பன்னிரண்டு திருக்கரங்களும், இரண்டு திருவடிகளும் உள்ள ஓருருவாய் விளங்க, உமாதேவியார் கருணைபூத்து எடுத்து அணைத்து உச்சி மோந்து பாலூட்டிச் சிவபெருமானிடத்திலே கொடுக்க, அவரும் மனமகிழ்ந்து இடபவாகனத்தின்மீது தமக்கும் உமாதேவியாருக்கும் நடுவிலிருத்தி எடுத்துக்கொண்டு திருக்கைலாய மலையையடைந்து எழுந்தருளியிருந்தார்.

முன்னே இத்திப்பொறிகள் சிறுவராய் உங்களைக் காத்தருளும் என்று அபயங்கூறி விடை கொடுத்தனுப்பப்பெற்ற தேவர்கள் அசுரர்களால் மிகமெலிந்து வாடி மீண்டும் அக் கைலையை யடைந்து "எம்பெருமானே, இனி ஒரு கணப்பொழுதாயினும் அவ்வசுரர் செய்யுந்துன்பங்களைப் பொறுக்கமாட்டோம், எங்கள்மேல் அருள் சுரந்து காத்தருளல்வேண்டும்" என்று இரந்தார்கள். அதுகேட்ட முதல்வன் திருவுள்ளமிரங்கி முருகக்கடவுளை நோக்கி "மைந்தனே, நீ இத்தேவர்களுக்கு அதிபதியாய்ச் சென்று சூரபன்மன் முதலிய அசுரர் கிளையைவேரறுத்து விண்ணகங் குடியேற்றித் தேவர்களைக் காக்கக்கடவாய்" என்று கட்டளை யிட்டருளி. நவசத்திகளின்வர

யிலாகத்தோன்றிய வீரவாகுதேவர்முதலிய இலக்கத்தொன்ப துவீரரையும், பூதகணங்களையும், சேனைகளாகக் கொடுத்து, சத்திவடிவாகிய வேலையும், பதினொரு உருத்திரர்வடிவாகிய ஆயுதங்களையும் அளித்து அனுப்பினர்.

சுப்பிரமணியப் பெருமான் ஆறு திருமுகங்களும், பன்னிரண்டு திருக்கரங்களும், இரண்டு திருவடிகளும் விளங்க, தோமரம் கொடி வாள் குலிசம் அங்குசம் அம்பு மணி பங்கயம் தண்டம் வில் மழு வேல் என்னும் பன்னிரண்டு ஆயுதங்களையுந்தாங்கி இரதத்திலேறி. வாயுதேவன் சாரதியாக விருந்து செலுத்த, இந்திரன் முதலிய திக்குப்பாலர்களும், முனிவரும், வீரவாகுதேவர் முதலான இலக்கத்தொன்பது வீரரும், நூற்றெட்டுப் பூதசேனைதிபதிகளும், இரண்டாயிர வெள்ளம் பூதசேனையும் சூழ்ந்துவர அக்கைலைமலையை விட்டு நீங்கி மாயாபுரியை யடைந்தார்.

திருவவதாரப்படலம் முற்றிற்று.



## தாரகாசுரன் வதைப்படலம்.



அம் மாயாபுரிக்கு அரசனும் சூரபன்மனது தம்பியும் ஆகிய தாரகன் கிரவுஞ்சாசுரனைத் துணையாகக்கொண்டு அங்கிருத்தலால் அவனைச் சங்கரிக்க வேண்டுமென நாரதமுனிவர் வேண்ட, அதற்கிசைந்து அவனைச் சங்கரிக்கும்படி வீரவாகுதேவர் முதலான வீரர்களோடு மாயாபுரிப் பட்டணத்தினுள்ளே புகுந்தருளினர்.

அப்பொழுது பூதசேனை யாவும் நகரத்தினுள்ளே நுழைந்து அங்குள்ள அவுணர்களோடு எதிர்த்து யுத்தஞ்செய்தனர்.

அதனைத் தூதுவர் அறிந்து தாரகாசுரனது அரசிருக்கை மண்டபத்திற் சென்று வணங்கி, அண்ணலே, கைலாய பதியாகிய சிவனது குமாரன் கந்தனென்னும் பெயருடையோன் பூதசேனைகளோடு யுத்தம்புரியுங் கருத்துடையவனாய் இங்கே வந்தனன். அவனது சேனைகள் வந்து நமது நகரத்தையழிவு செய்தன என்று முறையிட்டார்கள்.

அதுகேட்ட தாரகன் சினங்கொண்டு எழுந்து பரிசனங்களை அழைத்து எனது தேரைக்கொண்டுவாருங்களென்று கட்டளையிட அவர்கள் அவ்வாறே கொண்டுவந்தனர். தாரகன் அவ்விரதத்திலேறி மந்திரிகள் சூழ இரதகசதுரக பதாதிகளோடு பல படைக்கலங்கள் தாங்கிச்சென்று முருகக்கடவுளை எதிர்த்தான். அதுகண்ட பூதசேனைகள் அவுணரோடு எதிர்த்துப் போர்செய்தார்கள். அப்பொழுது தாரகன் தனது துதிக்கையை நீட்டி இலக்க வீரரையும் ஒன்றுகச்சேர்த்தெடுத்துக் கடலின்மீது எறிந்தான். அவர்கள் கடலில் வீழ்ந்து எழுந்து கரையேறி ஒரு பக்கத்தில் ஒதுங்கிப்போயினர். வீரகேசரியென்போன் அதனை நோக்கிச் சினங்கொண்டு வில்லை வளைத்து நூறு கணைகளையேவி அத்தாரகனுடைய முடியை வீழ்த்தினான். அவன் கோபங்கொண்டு கையிலிருந்த தண்டத்தை வீரகேசரிமேல் எறிந்தான். அத்தண்டமானது வீரகேசரியின் மார்பிலே பட அவன் மயங்கி வீழ்ந்தான். மற்றுள்ள வீரரும் வீரவாகுவும் அவ்வசுரனை எதிர்த்து யுத்தஞ் செய்தனர். அப்பொழுது அவ்வசுரன் பல படைகளை ஏவ வீரவாகு அவைகளை அழித்து அவனைப் புறங்காட்டி யோடும்படி செய்து பின்பு பாசத்தினாற் கட்டிக்கொண்டு போகும்படி தொடர்ந்து செல்ல, அத்தாரகன் மாயாவலியுடைய கிரவுஞ்சகிரியினுள்ளே சென்று ஒளித்தான். வீரவாகு அவன் சென்ற வழியே தொடர்ந்து செல்லுதலும், அம்மலை சூரியகிரணஞ் செல்லாத இருட்பூமிபோன்றிருந்தது. அதனால் அங்கே நுழைந்த தாரகனை

க்காணுமலும், மீண்டு வருதற்குரிய வழியை யறியாமலும் வீர வாகு மயங்கி நின்றனர். கிரவுஞ்சாசுரன் அவரை அங்கே மோக நித்திரை செய்யும்படி யாக்கினன். வீரவாகுவைக் காணுதவ ராய் மனநொந்து இளையோரெண்மரும் இலக்க வீரரும் பூத சேனையும் அவரைத்தேடி அவர் போனவழியே சென்று அம் மலையினுள் நுழைய அவரனைவரையும் அக்கிரவுஞ்சாசுரன் மோக நித்திரையுள் ஆழ்த்தினன். அவர்கள் யாவரும் அவ் வாறு அகப்பட்டது கண்டு தாரகன் வெளிப்பட்டு ஓர் இர தத்திலேறி யுத்தகளஞ் சென்று வில்லைவளைத்து நாணொலி செ ய்து பூதசேனைகள்மேல் அம்புகளைத்தூண்டி ஆர்ப்பரித்தலும் பூதர்கள் அஞ்சி நாற்றிசையினும் ஓடினர்.

முருகக்கடவுள் இவைகளை யுணர்ந்து பூதசேனைகள் சூழ இரதத்தைச் செலுத்தி அத்தாரகனிருக்கு மிடத்தை யடையப் பூதர்கள் தானவசேனையை எதிர்த்து யுத்தஞ்செய் தனர். சுப்பிரமணியக்கடவுள் தாரகனை எதிர்த்தனர். இரு வரும் ஆயிரம் ஆயிரமாகிய கணைகளை ஒருவர்மேல் ஒருவர் தூண்டி யுத்தஞ் செய்தனர். பின்பு தாரகனது வில்லை முரு கக்கடவுள் ஒரு கணையினாலே துண்டமாக்கினர். தாரகன் மற் ருேர் வில்லை யேந்தி யுத்தஞ்செய்தான். இவ்வாறு இருவர்க்கு மிடையிலே பலவிதமான யுத்தங்கள் நடந்தன. இப்பெரிய போரினாலே இருவரும் பெருங்கோப முடையவராய்ப் பகிரண் டத்தையடைந்து அங்கே பெருஞ் சமர்விளைத்தனர். அப்பொ ழுது இந்திரன் முதலியதேவர்கள் இருவரையுங்காணுதவராய் அச்சங்கொண்டு பெருங் கவலையோடு ஆறுமுகக்கடவுளுடைய திருவடிகளைச் சிந்தித்து அவருக்கு மிகப் பிரீதியுள்ளதும், கார்த்திகை விரதத்தை யொத்ததும், மிக்க பலனை யளிக்கத் தக்கதும், மேன்மை யுடையதுமான சட்டிவிரதத்தைத் தொ டங்கி, மண்டலம் கும்பம் விம்பம் என்னும் மூன்றிடத்தும் சட்டிவரையிலே கற்பவிதிப்படி மந்திரத்தோடு ஆறுமுக

கடவுளைப் பூசித்து வழிபட்டுவந்தனர். அக்கடவுள் அங்கு பிரசன்னமாகி, உங்கள் விரதத்தையும் பூசையையும் ஏற்று மகிழ்ந்தோம், உங்களுக்கு வேண்டிய வரத்தைக் கேளுங்களென்ன "சுவாமி, கொடியோனாகிய இத்தாரகனைச் சங்கரித்து எங்களைக் காத்தருளல் வேண்டு"மென்று பிரார்த்தித்தனர். கடவுள் அத்தேவர்கள்மேலே திருவருள்கூர்ந்து, அஞ்சாதீர், அவ்வாறே நாம் செய்கின்றோமென்று திருவாய் மலர்ந்தருளி, அத்தாரகனை எதிர்த்துச் சமர்செய்தார். இருவரும் எதிர்த்து யுத்தஞ்செய்யுங்காலையில் நான்முகன்படை நாரணன் படை முதலியவைகளைத் தாரகன் ஏவ அவை முருகக்கடவுளது பாங்கரில் வந்து நின்றுவிட்டன. பின் சிவப்படையை ஏவினன். அதனை முருகக்கடவுள் செங்கையாற் பற்றினர். தாரகன் இனி மாயையால் வெல்ல வேண்டுமென்று கிரவுஞ்சாசுரனைத் துணையாகக்கொண்டு பல மாயைகள் செய்தான். ஆறுமுகக்கடவுள் வேற்படையை நோக்கி இத்தாரகனையும் கிரவுஞ்சத்தையும் அழித்து வீரவாகு முதலாயினோரை விரைவிலே கொண்டுவருவாயாகவென்று ஏவினர். அவ்வேற்படை விரைந்து சென்று தாரகனது மார்பைப் பிளந்து கிரவுஞ்சத்தைத் தகளாக்கி அங்கே துயில்கின்ற வீரரையெழுப்பி ஆகாயகங்கையில் ஆடிப் புனிதமுற்று மீண்டுவந்து ஆறுமுகக்கடவுளது திருக்கரத்தில் வீற்றிருந்தது. அது கண்டு பிரமா விட்டுணு இந்திரன் முதலிய தேவர்கள் மகிழ்ந்து ஆரவாரித்தப் பூமாரிபொழிந்து தோத்திரஞ்செய்தனர். பின்பு வீரர் யாவரும் மயக்க நீங்கியெழுந்து வந்து குமரவேளைச் சூழ்ந்து துதித்தனர். அந்த யுத்தத்தில் இறந்த பூதசேனைகளை எழுப்பிக்கொண்டு முருகக்கடவுள் செருநிலமகன்று சென்றனர்.

தாரகாசுரன் வதைப்படலம் முற்றிற்று.



## வழிநடைப்படலம்.



பிரமா விட்டுணு இந்திரன் முதலிய தேவரும் இலக்கத்தொன்பது வீரரும் பூதரும் புடைசூழ அச்செரு நிலத்தை விட்டு நீங்கித் தென்றிசையை நோக்கிச் செல்லும்போது, சூரியன் மேற்றிசையை யடைய முருகக்கடவுள் தேவகிரியை யடைந்தார். மாலைக்காலமும் நீங்கிச் சந்திரோதயமாயிற்று. அப்பொழுது அரிபிரமேந்திராதி தேவர்கள் யாவரும் கந்தமூர்த்தியுடைய பாதங்களை வணங்கி "எந்தாய், கொடியதாரகன் செய்த துன்பங்களால் இதுவரையில் நொந்து வருந்தினோம். அவனைக் கிரவுஞ்சகிரியோடு முடியும்படி அழித்தீர். அடியேம் பெற்ற மகிழ்ச்சி காரணமாகத் தேவரீரைப் பூசித்து வழிபடல் வேண்டுமென்னும் அன்புடையோம். அதற்கு விடைகொடுத்தருளல் வேண்டு" மென்று இரக்க, முருகக்கடவுள் அவ்வேண்டுகோளுக்கு இசைந்தனர். பின்பு அக்கடவுளுடைய கட்டளைப்படி தெய்வத்தச்சன் அழகிய ஒரு நகரத்தையும் அதன் நடுவிலே சிறந்த ஒரு கோவிலையும் நிருமித்தான். கந்தமூர்த்தி தேவரும் வீரரும் பூதரும் ஒருங்குசூழ அக்கோவிலே அடைந்து இரத்தினங்களால் இழைக்கப்பட்ட அழகிய ஒரு சிங்காசனத்தின் மேல் வீற்றிருந்தருளினர். தேவர்கள் யாவருங்கூடி அக்கடவுளைப் பூசிக்கும் பொருட்டுக் கங்காநதியை மனத்தில் நினைத்தனர். அவ்வாறே அந்நதியும் வந்து சேர்ந்தது. தேவரும் முனிவரும் அக்கங்கா தீர்த்தத்தினாலே மஞ்சன நீராட்டிப் பொன்னுடை சாத்தி அழகிய பூமாலைகளைச் சூட்டிச் சந்தன முதலிய வாசனைப்பொருள்களைத் திருமேனியிலே யணிந்து தூபதீப முதலிய பலவகையுபசாரங்களாலும் ஆறுமுகக்கடவுளைப் பூசித்தனர். பின்பு அன்போடு பல தோத்திரங்களைச் சொல்லித் துதித்து வணங்கினர். கடவுள் அவர் செய்த பூசையை ஏற்று மகிழ்ந்து அவர்க்கு அருள் புரிந்தனர்.

மறுநாள் உதய காலத்திலே சுப்பிரமணிய மூர்த்தி அத்தேவகிரியைவிட்டு நீங்கி யாவரும் புடை சூழச் சென்று, வழியிலே திருக்கேதாரம், காசி, திருப்பருப்பதம், திருவேங்கடகிரி, திருக்காளத்தி, திருவாலங்காடு, காஞ்சீபுரம், திருவண்ணாமலை, திருவெண்ணெய் நல்லூர், திருமுதுகுன்றம், சிதம்பரம் முதலாகிய தலங்களைக் கண்டு வணங்கிக் கொண்டு மண்ணியாற்றங்கரையை யடைந்தார். அடைதலும் பகற்காலம் நீங்கி இராக்காலம்வரச் சந்திரனும் உதயமாயினன். அப்பொழுது தேவர்கள் சுவாமியை வணங்கி, அழகிய சோலைகள் பலவுடையதாய்ச் சிவபெருமான் எழுந்தருளியுள்ள தலங்கள் பலவற்றைத் தன் கரையிலுள்ளதாயிருப்பது இம்மண்ணியாறு. பரிசுத்தமான இந்நதிக்கரையிலே இன்று தங்கியருளல் வேண்டுமென்றனர். கடவுளும் அதற்கிசைந்து விசுவகன்மாவைக்கொண்டு ஒரு நகரஞ் செய்வித்துத் திருச்சேஞ்ஞலூர் என்றுபெயரிட்டு அந்நகரத்தின் நடுவிலுள்ள திருக்கோவிலிலே தேவர்கள் புடைசூழ வீற்றிருந்தனர். பின்பு தேவர்களுக்காக அமைக்கப்பட்ட இருக்கைகள்தோறும் அவரவர்களை அனுப்பி அன்றிரவுபோக்கி, மறுநாள் வைகறையிலே விசுவகன்மாவைக்கொண்டு ஆலயமொன்று குயிற்றுவித்து அதன் நடுவே சிவபெருமானுடைய திருவுருவைப் பிரதிட்டைசெய்து, பஞ்சகவ்விய முதலிய திரவியங்களினாலே அபிஷேகஞ்செய்து, பொன்னாடை, இரத்தினாபரணம், பூமாலை முதலியவைகளையும் சந்தன முதலிய வாசனைப் பொருள்களையும் அணிந்து, பலவகை அன்னங்களை நைவேதனஞ் செய்து, தாம்பூலம் அருத்தித், தூபதீபங்களால் ஆராதித்து முப்முறை வணங்கித் தோத்திரஞ்செய்தனர்.

அப்பொழுது சிவபெருமான் உமாதேவியாரோடு இடபாரூடராய் வெளிப்பட்டு "மைந்தனே நீ செய்த பூசையை ஏற்று மகிழ்ச்சிபெற்றேம். சூரபன்மன் முதலிய அசுரர்யாவரை

யும் அழிக்கும்படி இந்தப் படையை உனக்குத் தருகின்றேம். இது பிரமா விஷ்ணு இந்திரன் முதலாயினோருக்குக் கொடுக்கப்பட்ட படைபோல்வ தொன்றன்று. புவனங்கள் முழுவதையும் ஒரு கணத்திலே முடிவு செய்யும் இயற்கையுள்ளது என்றுகூறி, மகா பாசுபதப்படையை அவருக்கு அளித்து மறைந்தருளினர்.

பின்பு தேவரும் வீரரும் பூதரும் புடை சூழ்ந்துவர இரதத்திலேறி மண்ணியாற்றங்கரையிலுள்ள அத்திருச்சேஞ்ஞலூரைவிட்டு நீங்கி, திருவிடைமருதூர், திருமயிலாடுதுறை திருப்பறியலூர், திருவிலஞ்சியம், திருவாரூர், திருப்பரங்குன்றம், திருச்செங்குன்று முதலிய தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருச்செந்தூரை யடைந்தார். அங்கே தேவகம்மியனால் ஆக்கப்பட்ட கோவிலினுள்ளே வீற்றிருந்து, சூரபன்மன் சிங்கமுகன் தாரகன் முதலிய தானவர் பிறந்ததும், தவஞ் செய்ததும், எவராலும் வெல்லற்கரிய பெருவரம் பெற்றதும், பின்பு அரசு செய்ததும், அவ்வசுரர் செய்யும் மாயவஞ்சனைகளும், அவர்கள் பெற்ற வெற்றியும், வல்லமையும், மேன்மையும், தேவர்களுக்கு அதுவரையிலே செய்த துன்பங்களும் ஆகிய எல்லாவற்றையும் தேவ குருவாகிய பிரகற்பதியினாலே விரிவாக அறிந்து, இந்திரனுக்கு அபயங்கொடுத்து, வீரவாகுவை அசுரர் தலைவனாகிய சூரபன்மனிடத்துத் தூதுசெலுத்தி அவனுடைய மனக்கருத்தைத் தெளிந்துகொண்டு, மகேந்திரநகருக்கு எழுந்தருளக் கருதினர்.

வழிநடைப்படல முற்றிற்று.



# ஏமகூடப் படலம்.



செயந்திமாநகரத்திலே திருக்கோவிலினுள் இரத்தின சிங்காசனமிசை வீற்றிருந்த கந்தமூர்த்தி பிரமன் மால் இந்திரன் தேவர் முனிவர் யாவரும் அறியும்படி வீரவாகுவை நோக்கி "சூரபன்மனையும் அவுணப்படையையும் அழித்து அவரால் வருந்துகின்ற தேவரைக்காக்கும்படி மகேந்திரபுரிக்கு நாம் போகவேண்டும். நமது தேரை விரைந்து கொண்டுவருவாயாக" என்றார். தேவர்கள் அதைக்கேட்டு நமது துன்பம் ஒழிந்தது ஒழிந்தது என்று களிப்படைந்து துள்ளினர். ஆடினர், பாடினர். கந்தமூர்த்தியுடைய திருவடிகளை முடிமேற் சூடிக்கொண்டனர். உடனே நந்திகணத்தலைவர் ஒருவர் சென்று மனோவேக மென்னும் பொற்றேரைக் கொண்டுவரும்படி சாரதியைக் கூவ, அவனும் அத்தேரைக்கொண்டு வந்து நிறுத்தினன். முருகக்கடவுள் அந்த இரதத்தின்மேலேறி, தம்மருகில் நின்றமற்றவர்களை நோக்கி, நீங்களும் உங்கள் உங்கள் ஊர்திகளில் ஏறி நம்மோடு வரக்கடவீர் என்றார். உடனே பிரமன் அன்னத்தின் மீதும், மால் கருடன் மீதும், இந்திரன் விமானத்தின்மீதும், மற்றைத் தேவர்கள் தத்தம் ஊர்திகளிலும் ஏறி வந்தனர். வீரவாகுவும் வீரர்கள் எண்மரும் இலக்கத்தோரும் ஒவ்வோர் இரதங்களில் ஏறி வந்து தேவாதி தேவராகிய கந்தமூர்த்தியைச் சூழ்ந்தனர். சுப்பிரன் மேகமாலி சித்திராங்கன் முதலிய பூதசேனாதிபதிகள் நூற்றெண்மரும் வந்து சூழ்ந்தனர். இரண்டாயிர வெள்ளம் பூதசேனைகளும் வந்து சூழ்ந்து ஆர்த்தனர். பேரிதுடி காளம் சல்லரி தக்கை கொம்பு உடுக்கை சங்கம் குடமுழா முதலிய பலவாத்தியங்களைப் பூதர்கள் முழக்கிச்சென்றனர். இவ்வாறு சேனைகள் பலவுஞ் சூழ அந்தர நெறியினாலே சமுத்திரத்தைக்கடந்து அப்பாற் சென்று பலவளங்களும் நிறைந்து விள

ங்கும் இலங்கைமாநகரம் எதிர்ப்பட அதன் சிறப்புக்களை நோக்கிக்கொண்டுபோதலும் மகேந்திராபுரி எதிரே தோன்றிற்று.

அப்பொழுது சங்குசக்கரதாரியாகிய மாலும் பிரமனும் இந்திரனும் கந்தமூர்த்தியின் முன்னே வந்து வணங்கி "எதிரே காணப்படுந் தேசமே சூரபன்மனுடைய மகேந்திரபுரி. கொடிய நீசர்கள் வாழுதலால் அங்கே தேவரீர் செல்லுதல் முறையன்று. அதற்கு அடுத்த எல்லையாகிய இங்கே ஒரு பாசறை வகுத்து இருந்துகொண்டுபின் வேண்டியன செய்யலாம்" என்றனர். கந்தசுவாமி அவ்வாறே யாகுகவென்று திருக்கண்ணோக்கஞ்செய்து தேவகம்மியனை யழைத்து, மாணிக்க கங்கையென்னும் புண்ணிய நதிக்கரையிலே சேனைகளோடு நாம் தங்குதற்கேற்ற பாசறை யொன்று வகுப்பாயாக வென்று கட்டளையிட, விசுவகன்மா அக் கட்டளையைச் சிரமேற்கொண்டு, இமைப்பொழுதிலே மாடங்களும் கூடங்களும் மண்டபங்களும் கோபுரங்களும் சோலைகளும் வாவிகளும் நிறைந்தவீதிகள் அளவில்லாதன பொருந்த அழகினால் இணையின்றி விளங்கும் சிறந்த ஒரு நகரத்தையுண்டாக்கி, அதன் நடுவில் ஆறுமுகப்பெருமானுக்குரிய ஒரு திருக்கோவிலும் அமைத்து "ஏமகூடம்" என்று அதற்குப் பெயரிட்டான்.

மனத்தால் நினைந்து அவன் குயிற்றிய அந்நகரத்தையும் பாடி வீடுகளையுங் கந்தவேள் விருப்பத்தோடு மகிழ்ந்து நோக்கிக் கருணைசெய்து, தேரினின்றும் இறங்கிப் பூதர்களை வீதிகடோறும் இருக்கும்படி நியமித்து, பிரமாமுதலிய தேவரும் வீரரும் உடன்வரத் திருக்கோவிலினுள்ளே சென்று; இரத்தின சிங்காசனத்தின்மேல் எழுந்தருளி, இலக்கத்தொன்பது வீரர்கள் அன்போடு போற்றி செய்யவும் தேவர்கள் முறைமுறையாய்ப் பணி செய்யவும் மகிழ்ச்சியோடு அந்த ஏமகூடத்தில் இருந்தருளினர்.

ஏமகூடப்படல முற்றிற்று.



# சூரபன்மன் வதைப்படலம்.



சுப்பிரமணியக்கடவுள் ஏமகூடத்தில் வந்திருத்தலைச் சூரபன்மன் நாரதமுனிவர் வந்துசொல்ல அறிந்து வடவைத்தீயைப்போலச் சிறி நகைத்து "ஆயிரங்கோடி யண்டங்களையும் ஒருங்கே யரசாளவல்ல வீரனாகிய என்னை இச்சிறுபாலனோ பொருது வெல்லவருபவன் இவனைச் சிறுபாலனென்றும்விடேன். என் தம்பியாகிய தாரகனையும் கிரவுஞ்சகிரியையும் அழித்துவிட்டோமென்று செருக்கினான் இந்நகரத்துக்கும் வந்தனன் போலும். என் மகனாகிய பானுகோபனை அனுப்பி இவனைவெற்றிகொண்டு வரும்படி செய்வேன்" என்று கூறி, தூதரைநோக்கி என் மைந்தனாகிய பானுகோபனைக் கடிதில் அழைத்து வாருங்களென்றான். தூதுவரோடி அவனை யழைத்துவந்தனர். அவன் விரைந்து வந்து சூரபன்மனை வணங்கி, எந்தாய், யான் செய்யவேண்டிய பணியென்னையென்ன, நீ சென்று கந்தனையும் வீரரையும் பூதசேனைகளையும் வென்று என்முன்னேவரக்கடவாயென்றான். பானுகோபன் ஓர் இரதத்திலேறி அசுரசேனைகள் சூழக் கந்தமூர்த்தியிருக்குமிடஞ்சென்று, வீரவாகுவோடும் மற்றை வீரரோடும் பூதசேனைகளோடும் எதிர்த்துப் பலவிதமான யுத்தஞ் செய்து, அவுணசேனைகளை யிழந்து ஆற்றாது முடிவிலே தானும் உயிர்மாண்டனன். சூரபன்மனது மைந்தனாகிய இரணியன் என்பவன் வந்து யுத்தஞ் செய்து முடிவிலே தப்பியோடினான். அக்கினிமுகாசுரன், மூவாயிரமைந்தர், தருமகோபன் முதலாகிய அவுணரும் தத்தஞ்சேனைகளோடு வந்து பலவிதமான யுத்தங்கள் செய்து இறந்தனர்.

சூரபன்மனது தம்பியும் ஆயிரந்தலைகளும் இரண்டாயிரங்கைகளும் உள்ளவனுமான சிங்கமுகாசுரன்தன் சதுரங்க சேனைகளோடு வந்து எதிர்த்து யுத்தஞ்செய்தான். அவனோடு

வீரவாகுவும் மற்றை வீரரும் வந்து போர்புரிந்தனர். இருதிறத்தவரும் பலவிதமான யுத்தங்கள் செய்துகொண்டிருக்கும் பொழுது சிங்கமுகாசுரன் கோபங்கொண்டு வீரவாகுமுதலானவர்களை மாயாபாசத்தினாலே கட்டி உதயகிரியின் சிகரத்திலுள்ள ஒரு குகையிலே கொண்டுபோய் வைத்தான்.

பின்பு சுப்பிரமணியக் கடவுளோடு எதிர்த்துச் சமர்செய்து மாயாரூபங்கொண்டு சேனைகளை விழுங்கினான். அக்கடவுள் கோபங்கொண்டு வில்லை வளைத்து நாணேறிட்டு ஐந்து பாணங்களைத் தொடுத்து மார்பில் ஒன்றும் நெற்றியில் நாலுமாகத் தைக்கும்படி செலுத்தினார். அப்பாணங்கள் சென்று அவ்வாறு தைத்தலும் அவன் மூர்ச்சித்துக் கீழே விழுந்தான். அநேக பாணங்களையேவி அவனுடைய சேனைகளைச் சங்கரித்தார். வீரவாகு முதலான வீரரையும் மாயாபாசத்தினின்று விடுவித்தார். பின்பு சிங்கமுகாசுரன் மூர்ச்சை தெளிந்து எழுந்து பெருங் கோபத்தோடு எதிர்த்துப் போர்புரிந்தான். அறுமுகக்கடவுள் அளவில்லாத பாணங்களையேவி அவனுடைய தலைகளையுங் கைகளையும் ஆயிரத்தெட்டுமுறை அறுத்தறுத்து வீழ்த்தினார். ஒருமுகமும் இரண்டு கரங்களுமொழிந்த மற்றவற்றையெல்லாம் அவ்வாறு வெட்டி வெட்டி வீழ்த்த மீண்டும் மீண்டும் அவை முன்போலவே முளைத்து முளைத்து வந்தன. கடவுள் அதுகண்டு கோபங்கொண்டு உங்காரஞ்செய்து உரப்பலும் அவைபின் உண்டாகாமல் உள்ளே யடங்கின. அவன் அதனாற் கோபமும் மானமுங்கொண்டு சிங்கநாதஞ்செய்து தண்டொன்றேந்தி எதிர்செல்லலும் முருகக்கடவுள் குலிசப்படையை யேவி அவனைச் சங்கரித்தருளினார். அதைக்கண்ட தேவர்கள் ஆனந்தங்கொண்டு பூமாரி பொழிந்து துதித்தனர்.

தன் தம்பியாகிய சிங்கமுகாசுரன் யுத்தகளத்தில் இறந்து விழுந்தானென்பதைச் சூரபன்மன் அறிந்து கவலைக் கடலுள்

மூழ்கி அடியற்ற மரப்போல நிலத்திலே விழுந்து புரண்டு புலன் கலங்கிப் பலவாறு புலம்பிப், பின்பு தெளிந்து சினங் கொண்டு பலவிடங்களினும் பரந்து கிடக்குந் தனது பெரு வலியுடைய சேனைகளைச் சதுரங்கபலத்தோடு வரும்படிசெய்து முருகக்கடவுளோடு சமர்புரியும்படி புறப்பட்டான்.

சூரபன்மனானவன் அழகிய ஓர் இரதத்திலேறிப், பலவகை வாத்தியங்கள் முழங்க அவுணசேனைகள்தன்னைச் சூழ்ந்துவர அறுமுகக் கடவுளிருக்குமிடத்தை யடைந்து, தனது சேனைகளைத் தூண்டிப் பூதசேனைகளோடும் வீரர்களோடுஞ் சமர்புரியும்படி யேவினான். அவுணசேனைகள் வேல் வாள் தண்டம் கதை முதலிய ஆயுதங்களினாலே முருகக்கடவுளுடைய சேனைகளைத்தாக்க அவர்களும் இவர்களோடு எதிர்த்து யுத்தஞ் செய்தனர். இருதிறத்தினும் பெரும்போர் உண்டாயிற்று. பூதசேனையும் வீரரும் அவுணரோடு சமர்செய்யவாற்றாது இரிந்தனர். அதுகண்டு வீரமொய்ம்பன் வில்லையேந்தி வளைத்து நாணேறிட்டு எதிர்த்துச் சரமாரிபொழிந்து அவுணர்களது தலை புயம் மார்பு கை கால் முதலானவைகளை அறுத்து மலைபோலக் குவித்து ஆர்ப்பரித்தான். அவனை அவுணசேனைகள் வந்து வளைத்துப் பலவகை ஆயுதங்களையும் பொழிந்து எதிர்த்துப் போர் புரிந்தனர். அவன் நெடுநேரம் போர் புரிந்து அச்சேனா சமுத்திரத்தைக் குறைத்தல் இயலாமை கண்டு கந்தமூர்த்தியின் பக்கத்திலே வந்து நின்றனன்.

பூதப்படை யிழந்ததும் வீரமொய்ம்பனுந் தம்பியரும் வருந்தி மீண்டதும் அவுணப்படைசெய்யுஞ் செயலுங் கண்டு, கந்தமூர்த்தி புன்முறுவல்செய்து, நீண்ட ஒரு வில்லைக் கரத்திலேந்தி வளைத்து நாணொலிசெய்து அளவில்லாத அம்புகளைப்பூட்டி அவுணப்படைமேற் செலுத்தினார். அவைசென்று கொடிகளையுங் குடைகளையும் படைகளையும் யானைகளையுந் தேர்களையும் அவுணர் முடிகளையும் விழும்படி அட்டன.

எம்பிரான் விட்ட சரமாரிபால் அவுணப்படை மரம்போற் சாய்ந்தன. குதிரைக்கூட்டங்கள் கடலிலுள்ள திரைகள்போல் எழுந்து விழுந்தன. இரதங்கள் மலைபோற் சாய்ந்தன. யானைகள் கரியமுகிற் கூட்டங்கள்போல விழுந்தன. கவிகைகள் சூரிய சந்திரர் சாய்ந்து விழுந்தாற்போல விழுந்தன. பிரமன் மால் இந்திரனாகிய தேவர்கள் அதுகண்டு ஆனந்தங் கொண்டனர். அச்சமயத்தில் முருகமூர்த்தியானவர் வாயுதேவனாகிய சாரதியை நோக்கி அவுணசேனை யிருக்குமிடமெல்லாம் இரதத்தை விடுக்குதியென்றார். அவ்வாறே சாரதியும் அவுணப்படை யிருக்குமிடமெல்லாம் இரதத்தைச் செலுத்தினான். முருகக்கடவுள் அவுணப்படை மாயும்படி வில்லிலிருந்து ஆயிரம் ஆயிரமான கணைகளைத் தூண்டி அவுணரது கைகளையும் மார்பையும் தலைகளையும் அறுத்துப் பிணமலையாய் விழும்படி செய்தார். இரத்தவெள்ளம் கடல்போலாயது. அப்பிணமலைகளை நாய்கள் கடித்துண்டன. யானைகள் காலொருபுறமும் கையொருபுறமும் கழுத்தொருபுறமும் தலையொருபுறமும் வாலொருபுறமும் கொம்பொருபுறமும் முதுகொருபுறமுமாகத் துணிபட்டு விழுந்தன. குதிரைகள் தலையுங்காலும் வாலும் பல்லும் உடலும் வெவ்வேறு துண்டங்களாக்கப்பட்டுப் பலபக்கங்களினுஞ் சிதறி விழுந்தன. அங்குள்ள சேனைகள் அவ்வாறு அழிதலும் மற்றையண்டங்களிலுள்ள அவுணப்படைகளெல்லாம் வந்து மொய்த்தன. அவை யாவற்றையும் முருகக்கடவுள் கண்ட துண்டமாக்கினார். பின்பு மற்றை அண்டங்களினுள்ள அவுணப் படைகளும் இவ்வாறே வருமென்றுன்னி அண்டகோளகையின் வாயிலைச் சரங்களினால் அடைத்தருளினார். பின்பு அண்டமுழுதும் நிறைந்து கிடக்கும் அவுணப்பிணமலைகளைத் திருநோக்கத்தினாலே வெந்து நீறாகும்படி யாக்கினார். இவைகளைச் சூரபன்மன் உணர்ந்து சீற்றங்கொண்டு நமது சேனையை யலைத்த பகைவனைத் தேவர்களோடு கணப்பொழுதினுள்ளே முடிப்பேன் என்றான்.

முருகக்கடவுள் தமது தேரை விரைவாகச் செலுத்தி அவ்வசுரன் முன் எதிர்ப்பட்டார். சூரபன்மன் அறுமுகக்கடவுளைக் கண்களாற் கண்டு வெகுண்டு மகாமேருவை யொத்த சிலையொன்றை யெடுத்து வளைத்து நாணேறிட்டான். பூதரும் வீரருமாகிய சேனைகள் அவனை வளைத்துப் பலவகை ஆயுதங்களை வீசி ஆர்த்தனர். அவுணன் வில்லிலிருந்து பலகணைகளை ஏவி அச்சேனைகளை வருத்தினான். அதனால், பூதசேனைகளில் அநேகர் இறந்தனர். அநேகர் கைகால் அறுந்துமெலிந்தனர். பலர் மயங்கி வீழ்ந்தனர். பலர் அஞ்சியோடினர். ஓடவும் அஞ்சிப் பலர் மாறவேடம் பூண்டனர் இப்படிப் பூதர்கள் அழிபடுதலும் இலக்கத்தெட்டு வீரரோடு வீரவாகு தோன்றி யெதிர்த்து வில்லைவளைத்து அவுணன்மேற் கணைமாரி சொரிந்தார் அவை அவன்மேற்பட்டு ஒன்றுஞ் செய்யாது வீழ்ந்தன. சூரபன்மன் தன் சிலையிலிருந்து நூறுகோடி சரங்களைத்தூண்டி வீரர் விடுஞ் சரங்களைத் துணித்து அவர்கள் ஏறி வந்த இரதங்களையும், சிலைகளையும் அழித்தான். அதன்பின் அவர்களுடைய தோள்களினும் மார்பினும் சிரத்தினும் கரத்தினும் ஆயிரம் ஆயிரமான கணைகளைச் செலுத்தி இரத்தவெள்ளம் பெருகும்படி செய்தான். இலக்கத்தெட்டு வீரரும் எதிர்நிற்கலாற்றாது திரும்பினர். அப்பொழுது வீரவாகு சினங்கொண்டு அப்பகைவனது தேர்மேற்பாய்ந்து வாளினால் அவனுடைய வில்லைத்துணித்தார். அதனால் அவன்கோபங்கொண்டு வீரவாகுவின் மார்பிலே கையினாற் புடைத்தான். புடைத்தலும் வீரவாகு அயர்ந்து வீழ்ந்தனர். தூதனைக் கொல்லலாகாதென்று எடுத்து ஆகாயத்தில் வீசினான். வீரவாகு அங்கிருந்து மீண்டு கந்தமூர்த்தியின் பாங்கரில் வந்தடைந்தார்.

சூரபன்மன் மற்றோர் வில்லையெடுத்தான். முருகக்கடவுளும் நீண்ட ஒரு வில்லைக் கையிலேந்தினார். சூரபன்மன் இருபதிலக்கம் பாணங்களையேவினான். முருகக்கடவுள் சிலகணை

களைத்தூண்டி அவற்றை யறுத்தருளினர். அசுரன் பின்னும் பலகணைகளை விட்டான். கடவுள் அவற்றையுஞ் சிதைத்தார். சிதைத்த பின்னும் அத்தீயோன் சரங்களை விடுத்தான். கந்தவேள் நூறுகணைகளால் அவற்றையழித்து அவன்மேல் எழுநூறு வாளிகளை ஏவினர். அசுரன் அவற்றை யறுத்து இரண்டாயிரஞ் சரங்களைத் தூண்டினன். கடவுள் இரண்டாயிரம் வாளிகளால் அவற்றையறுத்துப் பின்னும் இரண்டாயிரங்கணைகளை அவன்மேல் விட்டார். கந்தமூர்த்தி விடும் பாணங்களை அசுரன் சிதைக்க அசுரன் விடுஞ் சரங்களை முருகக்கடவுள் சிதைக்க இவ்வாறே எவரும் அஞ்சத்தக்க யுத்தமானது நெடுநேரம் நடந்தது. பின் அசுரன் முருகக்கடவுள் ஏறி வந்த கொடியை யறுத்துக் கணைகளால் அவருடைய திருமேனி தோன்ருவண்ணம் மறைத்து வெற்றிச்சங்கமூதினன். முருகக்கடவுள் அக்கணைகளைச் சிதைத்து அவனேறிய பெரியதேரின்மேலுள்ள கொடியையறுத்துக் கடலிலே தள்ளினர். அப்பொழுது பானுகம்பன் தனது ஆயிரம் வாயினும் ஆயிரஞ்சங்கங்களைவைத்து ஊதினன். அதுகண்டு நாராயணனது சங்கமும் முழங்கியது. தேவர்கள் யாவருங்கூடி அக்கினிதேவனை முருகக்கடவுளது தேரிலே கொடியாயிருக்கும்படியேவ அவனும் அத்தேர்மேலே கோழிக்கொடியாகி நின்று கூவி அண்டங்கள் வெடிபட ஆர்த்தான்.

பின்பு சூரபன்மன் ஆகாயத்திலே செல்ல முருகமூர்த்தியும் அங்கே சென்றுதாக்கினர். சூரபன்மன் மண்ணிலே வந்தான். கடவுளும் மண்ணிலே வந்து எதிர்த்தார். சூரபன்மன் மறைந்து கடல்நடுவிலே ஒளித்தான். முருகவேள் அங்குஞ் சென்றுசமர்புரிந்தார். சூரபன்மன் மாயையால் மறைந்து மாதிர முடிவிலே யொளித்தான். கடவுள் அங்கும் போந்தனர்.

பின்பு மேருவினும் வைகுந்தத்தினும் அண்டகோளகையின்மேலுள்ளவாயிலினும் செல்லமுருகக்கடவுள் அங்குசென்

று சமர்புரிந்து சூரபன்மன் ஏறியதேரை அம்பினாற் சிதைத்தார். உடனே இந்திர ஞாலத்தேரை உன்னினான். உன்னலும் அது வரச் சூரபன்மன் அதன்மேலேறிச் சமர்செய்தான். பின்பு கந்தமூர்த்தியால் அடைக்கப்பட்ட மற்றை அண்டவாயிலை உடைத்து அங்குள்ள சேனைகளைக் கூவியழைத்து அவை சூழ்ந்துவர வந்து எதிர்த்தான். முருகக்கடவுள் அவற்றை நோக்கி அழலெழ விழித்தலும் அவையெல்லாம் வெந்துநீறாயின. அண்டத்தப்பால் நின்ற சேனைகள் வந்து சூழ்ந்து கந்தமூர்த்தியையெதிர்க்க அவற்றை நோக்கி உங்காரஞ்செய்து உரப்பினார். அதனால் அவையாவும் அழிந்து துகளாயின. பின்னும் அதன்மேலுள்ள அண்டத்திலிருந்து அவுணசேனைகள் வந்து சூழ்ந்து எதிர்த்தன. கரங்களிலுள்ள கணிச்சி சூலம் சக்கரம் தண்டு எழு என்னும் ஐந்து படைகளையும் முருகவேள்நோக்கி நம்மைச்சூழ்ந்து நிற்கும் இவ்வவுண சேனைகளையும் அப்பாலண்டங்களிலுள்ள சேனைகளையும் அழித்து இங்கே வருவீராகவென்றனர். அவ்வாறே அப்படைகள் பலபலவடிவங்கொண்டு அங்கேசூழ்ந்து நின்றசேனைகளையும் மற்றை ஆயிரத்தெழு அண்டங்களில் நிறைந்திருக்கும் அவுணசேனைகளையும் அழித்து மீண்டன. சூரபன்மன் சக்கரப்படையொன்றைவிட்டான். அதனைக் கடவுள் செங்கையாற்பற்றினார். மாயையினாலே பலபலவடிவங்கள்கொண்டான். சேதனப்பகழிபூட்டிக் கடவுள் அம்மாயா வடிவங்களை யழித்தார். அவுணன் மேலுள்ள ஒவ்வோரண்டங்களினுஞ் சென்றான். கடவுள் அவ்வண்டங்கள் தோறும் அவனைத்தொடர்ந்து சென்று சமரிழைத்தார். பின் இவ்வண்டத்திலுள்ள மகேந்திரம் வந்து சேர்ந்தான். அறுமுகக்கடவுள் அவனைவிடாது வந்துசேர்ந்தனர். அப்பொழுது இங்கிருந்த அவுணசேனை சூரபன்மனைச் சூழ்ந்து ஆரவாரித்தன.

அதுகண்ட முருகக்கடவுள் இவர் முயற்சி நன்றென்று நோக்கிப் புன்முறுவல் செய்ய, முன்னாளிலே திரிபுரங்கள் வெ

ந்தாற்போல அவ்வவுணப்படை வெந்து நீறாயின. அது கண்டு சூரன் கவலைகொண்டு "தம்பியர் மைந்தர் அமைச்சர் மற்றுள்ள சேனைகள் யாவரும் முடிந்தனர்: மிகுந்திருந்த சேனைகள் யாவும் இப்பொழுது முடிந்தன. யானே தனியனாயினேன் இனி யாதுசெய்வேன்" என்று பெருமூச்செறிந்து, மாயையின் சூழ்ச்சியால் இந்திரஞாலத்தேரை விடுத்து மந்தரகிரியைச்சொண்டுவரும்படி செய்ய, அதனால் அப்பலையிலுள்ள அமுதத்தின் காற்றுவீசி யுத்தகளத்தில் அதுவரையிலே முடிந்த அவுணப்படையெல்லாம உயிர் பெற்றெழுந்தன. அது கண்டு முருகக்கடவுள் சங்கார காலத்திலே உயிர்த்தொகை யனைத்தையும் முடிவுசெய்கின்ற சிவப்படையை யெடுத்து இவ்வவுணசேனைமுழுவதையும் அழித்து வரக்கடவாயென்று செலுத்தினார். அப்படை யெழுந்துபோய் அவுணசேனையை யொருங்கேயழித்து இந்திரஞாலத்தேர்மேலிருந்த மந்தரகிரியையுந் துகளாக்கி முருகவேள் பாங்கரில் வந்திருந்தது. சூரபன்மன் சினங்கொண்டு இந்திரஞாலத்தேரை யேவிப் பூதரையும் வீரரையுங் கவர்ந்துகொண்டுபோய் அண்ட கோளகை யுச்சியில் வைத்திருக்கும்படி செய்தான். முருகக்கடவுள் ஒரு கணையையேவி அத்தேரைப்பற்றிவரும்படி செய்து இலக்கத்தொன்பது வீரரையும் பூதசேனைகளையும் விடுவித்து, அவ்விந்திரஞாலத் தேரையும் அவுணன்பால் மீண்டுபோகாது தம்மருகிலே நிற்கும்படி செய்தார். பின்னும் அசுரன் பலவாறு யுத்தஞ்செய்தான்: கந்தமூர்த்தி இரண்டாயிரஞ் சரங்களால் அவனேறிய சிங்கத்தை யடித்து வீழ்த்தினார். அசுரன் சக்கரவாகப்புள்ளாக வந்தெதிர்த்தான். அப்புள்ளை முருகவேள் வாளினால் வெட்டிச்சிதைத்தார். பின் பாராகி நின்றான். அதனையும் அழித்தார். கடல்வடிவானான். அதனையும் அழித்தார் ஊழித்தீயாயும், மாருதமாயும் வந்தான். அவற்றையும் அழித்தார். பதினெண்கணங்களின் வடிவுகொண்டான். அவற்றையும் அழித்தருளினார்.

பின்பு அச்சூரபன்மனை நோக்கி "மேகத்திற்றோன்றி அக்கணமே யழியும் மின்னலைப்போல நிலையில்லாத மாயாவடிவங்கள் பலவற்றையும நம்முன்னே கொண்டாய். அம்பினால் அவற்றையெல்லாம் அழித்தனம். பேதாய்! நாம் அழிவில்லாத நமது பெரிய வடிவத்தைக் கொள்வோம். அதனைக்காண்குதி" என்று, தமது விசுவரூபத்தை அவனுக்குக் காட்டியருளினர்.

கந்தமூர்த்தி சமனாத்திரியில் வலப்பாதத்தையும் அசுரபர்வதத்தில் இடப்பாதத்தையும் வைத்தவராயும், எண்ணில்லாத முகங்களும் எண்ணில்லாத விழிகளும் எண்ணில்லாத கரங்களும் எண்ணில்லாத செவிகளும் எண்ணில்லாத நாசிகளும் உள்ளவராயும், அநந்தகோடி சூரியப்பிரகாசம் பொருந்தியவராயும், அநந்தவிதமான ஆடைகளும் ஆபரணங்களும் மாலைகளும் சுகந்தங்களும் அணிந்தவராயும், சர்வாண்டங்களும் ஒவ்வோர் அவயவங்களில ஒடுங்கிப் பரந்திருக்க வைத்தவராயுந் தோன்றக்கண்டான். முருகக்கடவுள் அவனுக்குச் சிறிது ஞானமுதிக்கும்படி அருள்செய்தார். சூரபன்மன் அவ்விசுவரூபத்தைத் தரிசித்தவுடனே ஆனந்தபரவசனாய் உரோமஞ்சிலிர்ப்ப அதிசயமடைந்து அவ்வடிவை மனத்தினால் வணங்கி நின்று "தேவாதிதேவா! இத்திருமேனியிலே சகல தேவர்களையும் சகல பூதங்களையும் பிரமன் மால் உருத்திரன் என்னும் மும்மூர்த்திகளையும் சகல முனிவர்களையும் உரகர்களையுங் கண்டேன். இவ்வடிவின் ஆதி நடு அந்தங்களைக் காண்கிலேன். முன்செய்த தவப்பயனால் எனக்கு இது தரிசனமாயிற்றன்றி வேறெவர்க்குங் காண்பதரிதாகும். தூதாக முன்னம் வந்தோன் இவரை விருப்பு வெறுப்பின்றி நின்ற பராபர முதல்வரென்றே பகர்ந்தான். அவன் பகர்ந்தவற்றை மெய்யென்று துணிந்திலேன். இப்பொழுதுதான் இவரே ஈசனென்னுந் தன்மைகண்டேன். அம்ம! யான் பெற்ற அண்டங்கள்யாவும் இவரது பதரோமத்திலடங்கி நிற்கின்றன. சிங்கமுகனாகிய எனது தம்பி

